# 5.காளமேகப்புலவர்

## (சிலேடைப் பாடல்)

**பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி**

**தமிழ்த்துறை, இலயோலா கல்லூரி**

**சென்னை**

donstony@loyolacollege.edu

9944911404

- காளமேகப் புலவர் 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு தமிழ்ப் புலவர் ஆவார். வைணவ சமயத்தில் பிறந்த இவர் திருவானைக்கா கோவிலைச் சேர்ந்த மோகனாங்கி என்பவளிடம் ஆசை கொண்டார். இதனால் தனது சமயத்தை விட்டு மோகனாங்கி சார்ந்திருந்த சைவ சயத்துக்கு மாறினார்.
- இவர் பல சிறந்த நயம் மிகுந்த பாடல்களையும் பாடியுள்ளார்.
- இவர் பாடிய சிலேடைப் பாடல்களும், நகைச்சுவைப் பாடல்களும் பல உள்ளன. சமயம் சார்ந்த நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.
- இவர் ஒரு ஆசு கவி ஆவார். திருவானைக்கா உலா, சரசுவதி மாலை, பரப்பிரம்ம விளக்கம், சித்திர மடல் முதலியவை இவர் இயற்றிய நூல்களாகும்.
- இவர் காலத்தே தென்னாட்டைச் சாளுவ மன்னன் திருமலை ராயன் (1453 -1468) ஆண்டுவந்தான். சகம் 1375-ல் தோன்றிய இவன் கல்வெட்டு ஒன்று திருவானைக்காவில்.

# வைக்கோலுக்கும் யானைக்கும்

- வைக்கோல்
- வைக்கோலானது வாரிக் களத்தில் அடிக்கப்படும்.
- பின்னர் அது வைக்கோல் போர்க் கோட்டையாக புகுத்தப்படும்.
- வைக்கோல் போரில் அது சிறந்து பொலிவுற்றிருக்கும்.

- யானை
- யானை பகைவர்களை வாரிப் போர்க்களத்தில் அடிக்கும்.
- பின்பு வந்து அதன் கட்டுத்தறியாகிய கோட்டைக்குள் புகும்.
- போர்க்களத்தில் சிறப்புடன் பொலிவுற்று விளங்கும்

# வைக்கோலுக்கும் யானைக்கும்

வாரிக் களத்து அடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும் - சீருற்ற
செக்கோலம் மேனித் திருமலைராயன் வரையில்
வைக்கோலும் மால் யானையாம்.

# சந்திரனுக்கும் மலைக்கும்

**சந்திரன்**

- சந்திரன் நிலாவாக விளங்குகிறது.
- நீண்ட வானத்தில் படிந்து சில நேரங்களில் உலாவுகிறது.
- தலைக்கு மேல் தோன்றி வருகிறது.

மலை

- மலையானது நிலத்தின் வாய் போலப் பிளவு அடுக்ககுகளோடு காணப்படுகிறது.
- நீண்ட வானத்தில் படிந்திருப்பது போலத் தோன்றுகிறது.
- சில வேளைகளில் நாம் மலைமேல் உலாவி வருகிறோம். அப்போது நமக்கு மேலே உயரமாகத் தோன்றுகிறது.

# சந்திரனுக்கும் மலைக்கும்

நிலவாய் விளங்குதலால் நீள்வான் படிந்து
சிலபோது உலாவுதலாற் சென்று தலைமேல்
உதித்து வரலால் உயர்மா மலையை
மதிக்கு நிகராக வழுத்து

# மீனும் பேனும்

**மீனானது:**

- நிலைபெற்ற நீரிலே தோன்றும்,
- அந்த நீர் அலைகளிடத்தே மேய்ந்து கொண்டிருக்கும்,
- நீந்தும் பொழுது பின்தொடர்ந்து குத்துகின்ற இயல்பும் உடையதாயிருக்கும்.

**பேனானது:**

- தலையில் நிலைத்த பேன் முட்டையிடத்திலிருந்து தோன்றும்,
- அடர்த்தியான தலைமயிரிலே திரிந்து செல்லும்,
- பின் பெண்களால் எடுத்து 'ஈச' என்னும் ஒலியுடனே குத்தவும் படும்.

# மீனும் பேனும்

மன்னீரி லேபிறக்கு மற்றலையி லேமேயும்

பின்னீச்சிற் குத்தும் பெருமையால் - சொன்னேன்கேள்

தேனுந்து சோலைத்திருமலையரா யன்வரையில்

மீனும்பே னுஞ்சரி யாமே.

# கண்ணாடியும் அரசனும்

- **கண்ணாடி**
- தன்னை நாடி வந்த அனைவருக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கும்
- நாடி வந்தவருக்கு அவர்களின் உண்மை தன்மையைக் காட்டும்
- தீமை விலக மங்கலப் பொருளாகக் கருதிப் பார்க்கப்படும்
- **அரசன்**
- தன்னை நாடி வந்த அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தருவார்
- நீதியை நாடி வந்தவருக்கு அவர்களின் உண்மை தன்மையைக் காட்டி நீதீ வழங்குவார்.
- அரசனைக் காணுதல் மங்கலப் பொருளாகக் கருதுவர்.

# கண்ணாடியும் அரசனும்

யாவருக்கும் ரஞ்சனை செய்தியாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால் - மேவும்
எதிரியைத்தன் னுள்ளாக்கி யேற்ற ரசத்தால்
சதிருறலா லாடியர சாம்.

# குதிரையும் காவிரி ஆறும்

குதிரை

- குதிரை ஓடும்.
- நல்ல குதிரைக்கு அடையாளமான‘சுழி’சுத்தம் உண்டாகியிருக்கும்.
- பகைவரை விரட்டியடிக்கும்.
- தன்னை வளர்ப்பவனிடம் அன்பால் தலை சாய்க்கும்.

காவிரி ஆறு

காவிரி ஆறு நீராய் ஓடும்.

நீர்ச்சுழி இருக்கும்.

நீர் சுத்தம் ஆகும்.

மக்கள் குளிப்பதற்காக விருப்பமுடன்அதன்மீது தலைசாய்ப்பர்.

# குதிரையும் காவிரி ஆறும்

ஓடுஞ் சுழிசுத்த முண்டாகும் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும் நாடறியத்
தேடு புகழான் திருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரியா மே